


Vol. II. No. 5.] MARCH, 1889. [Price 1 Pie Monthly.

## THE ONE MEDIATOR.

The person who can stand between two parties and make peace between them, must have the confidence of both sides, and thoroughly understand the position and feelings of both sides. He must not himself be involved in the dispute, but yet must be as fully acquainted with the matter as the parties themselves. Between God and man, therefore, who can fitly stand as mediator? Who is there in the universe that can fully understand both God and man, and can understand the offended heart of God as well as the helpless condition of the sinner, in such a way as to maintain the claims of God and the condition of man, and make peace between them? There is only one Being in the world who can do this, viz: the God-man, Jesus Christ.

I. He needed to be God in order that he might know the innermost thought and feeling of Him against whom man had sinned. He does not require to be always enquiring and seeking to know the will and desire of God, because he himself *is* God and feels and thinks the feelings and thoughts of God.

II. He needed to be Man in order that he might know the frailty, the helplessness, the needs, the yearnings of man. He therefore became "bone of our bone, flesh of our flesh," took upon himself our human nature, and was made man just as we are.

Hence, God and man equally have their most fitting representative in Jesus Christ, because in him God and man meet together. Therefore, there is but ONE MEDIATOR between God and man. No one needs to stand between man and Jesus Christ, for Jesus Christ himself is very man; and no one can come between Jesus Christ and God, for Christ himself is very God. No human mediators are required or accepted, to come between the individual soul and the God-man mediator Jesus Christ. Personal communication between the soul and Christ is all that is needed. No one can make Christ more tender or more likely to keep us, than he is himself; and God neither desires nor accepts any other intervention between man and Himself. "If any man sin, we have an Advocate with the Father." "There is one Mediator between God and man, the man Christ Jesus."

## ஒரே மத்தியஸ்தர்.

இருபட்சத்தாருக்கும் மத்தியில் நின்று அவர்களைச் சமாதானப்படுத்துகிறவன் அவ்விருதிறத்தாரின் நம்பிக்கையையுடையவனும் அவர்களுடைய அந்தஸ்தையும் குணங்குறிகளையும் பூரணமாய் அறிந்தவனுமாயிருக்கவேண்டும். தானே அவர்களுடைய வழக்கில் சம்பந்தப்படாதவனாயிருந்து அவர்களைப் போலவே அவ்வழக்குவரலாற்றை ஆதிமுதலந்தமாய் அறிந்தவனாயிருக்கவேண்டும். ஆகவே, தேவனுக்கும் மனுஷனுக்கும் மத்தியஸ்தனாய் நிற்கக்கூடியவர் யார்? தேவனுக்கும் மனுஷனுக்கும் நடுவாக நின்று விசனப்படுத்தப்பட்ட திவ்விய மனதையும், பாவியின் பரதபிக்கப்படத்தக்க நிலைமையையும் ஐயமறக் கிரகித்து, ஆண்டவர் நீதிக்கும் மானிடர் நிலைமைக்கும் குறைவுசெய்யாமல் இருபட்சத்தாரையும் ஒப்புரவாக்கத்தக்கவர் இச்செகத்தில் யார் உண்டு! இதைச் செய்யக்கூடியவர் ஒருவரே. அவரே தேவமனிதனாகிய இயேசுகிறிஸ்து.

I. மனுஷன் பாவஞ்செய்து விரோதித்த கடவுளின் உள்ளான எண்ணங்களையும், மனநோவையும் அறியும்பொருட்டு மத்தியஸ்தரானவர் தேவனாயிருக்கவேண்டும். அவரே தேவனாயிருந்து தேவனுக்குரிய எண்ணங்களை எண்ணி, அவருக்குரிய குணங்களையுடையவராயிருக்கிறபடியால் அவர் தேவனுடைய சித்தத்தையும், விருப்பத்தையும் அறியும்படிக்கு எப்போதும் தேடி விசாரிக்கவேண்டியதில்லை.

II. மனுஷனுக்குரிய பெலவீனம், உதவியின்மை, குறைவு, ஆவல் முதலியவைகளை அறியத்தக்கதாய் அம்மத்தியஸ்தர் மனுஷனாயுமிருக்கவேண்டியது. ஆகையால் "நம்முடைய எலும்பில் எலும்பும் மாம்சத்தில் மாமிசமுமாகி" மனுஷீகத்தை அணிந்துகொண்டு, நம்மில் ஒருவரைப்போலானார்.

இயேசுகிறிஸ்து இவ்விதமாய் தெய்வத்துவமும், மனுஷத்துவமும் உடையவரானதால், தேவனுக்கும் மனுஷனுக்கும் நடுவே நிற்கத்தக்க மத்தியஸ்தராயிருக்கிறார். ஆகவே, தேவனுக்கும் மனுஷனுக்கும் மத்தியஸ்தர் ஒருவரே; கிறிஸ்து மெய்யான மனுஷனாயிருப்பதினால் அவருக்கும் மனுஷனுக்கும் நடுநிற்க வேறொருவரும் தேவையில்லை. கிறிஸ்து தேவனாயிருப்பதினால் தேவனுக்கும் அவருக்கும் நடுநிற்க வேறேயாரும் வேண்டியதில்லை. ஒவ்வொரு ஆத்துமாவுக்கும் தேவமனுஷனான மத்தியஸ்தர் இயேசுகிறிஸ்துவுக்கும் நடுநிற்க மனுஷீக மத்தியஸ்தர்கள் தேவையுமில்லை, அங்கீகரிக்கப்படுவதுமில்லை. ஒரு ஆத்துமா கிறிஸ்துவைநோக்கி நேரே விண்ணப்பஞ்செய்வதே போதும். ஒருவரும் கிறிஸ்து நம்மிடத்தில் அதிகமான அன்புவைத்து உதவிசெய்ய அவரைத் தூண்டவும் முடியாது. தேவனும் மனுஷனுக்கும் தமக்கும் மத்தியஸ்தராக வேறொருவரை விரும்புகிறதுமில்லை, ஏற்றுக்கொள்ளுகிறதுமில்லை. "ஒருவன் பாவஞ்செய்வானானால் (இயேசுகிறிஸ்து) நமக்காக பிதாவினிடத்தில் பரிந்துபேசுகிறவராயிருக்கிறார்;" "தேவனுக்கும் மனிதனுக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே; மனுஷனாகிய கிறிஸ்து இயேசு அவரே."

## ARE THE VEDAS FROM GOD?—வேதம் ஈஸ்வரன் அருளியதா?

வேதங்கள் (1) அநேக தேவதைகள் உண்டென்றும் (2) சர்வமும் பிரமமென்றும் உபதேசிப்பதால் அவை ஈஸ்வரன் அருளியவை அன்றென்று சென்றமாதம் திருஷ்டாந்தப்படுத்தினோம். இதன்றி, அவை மனுஷோற்பத்தியைப்பற்றி ஒன்றுக்கொன்று விரோதமான பல போதனைகளைப் போதிக்கின்றமையாலும் அவை தெய்வாநுக்கிரகத்தாலுண்டானவையல்லவென்று இம்மாதம் தெறிவிக்கின்றோம்.

இருக்குவேதம் I. 159: 2-லும், அயித்தரிய பிராமணம் IV. 27-லும், பரமண்டலமும் பூமண்டலமுமாகிய தியாஸ், பிரிதிவிகளின் விவாக சம்பந்தத்தால் தேவர்களும், மனிதர்களும், மற்றும் சிருஷ்டிகளும் உண்டானார்கள் எனக் கண்டிருக்கிறது. இதுகாரணத்தினாலே அவையிரண்டும் சகல சிருஷ்டிக்கோடிகட்கும் மாதாவும் பிதாவும் என்று சொல்லப்பட்டிருக்கின்றன. அன்றியும், இருக்குவேதம் X. 81: 2, 3-லே விஸ்வகர்மா சகலத்தையும் படைத்தானென்றும், மேற்படி வேதம் X. 72: 2—லே கொல்லன் உலைக்களத்தினின்றும் நெருப்புப்பொறி பறக்கச்செய்கிறதுபோல பிராமணஸ்பதியானவர் சமஸ்த சீவசெந்துக்களையும் தமது வாயினின்றும் ஊதிவிட்டாரென்றும் கூறியிருக்கின்றது. மேலும் இருக்குவேதம் X. 90: 12-லே தேவர்கள் எக்கியஞ்செய்த ஆதி பலியாகிய புருஷனினின்றும் சகல சிருஷ்டிகளும் உற்பத்தியாயினவென்றும் வாசிக்கிறோம். அந்த ஒரே யாகத்திலிருந்து வானமும் பூமியும் அவற்றிலடங்கிய சகலமும் உண்டாயினவாம். அந்தப் புருஷனின் வாயிலிருந்து பிராமணனும், அவன் புஜங்களிலிருந்து ரஜபுத்திரரும், அவன் தொடைகளிலிருந்து வைசியரும், அவன் பாதத்திலிருந்து சூத்திரரும் உண்டானார்கள் என்று கூறியிருக்கிறது.

மற்றவிடங்களிலே இந்திரன், அக்கினி, வாயு, இரணியகர்ப்பன், ஸ்கந்தன், அதிதி முதலானவர்கள் சிருஷ்டிகர்த்தாக்களாகக் கூறப்பட்டிருக்கிறார்கள். அநேக தேவர்கள் உண்டென்று உபதேசிக்கும் வேதமானது அவர்களில் ஒவ்வொருவரும் சகலத்தையும் சிருஷ்டித்ததாகவும் உபதேசிக்கத்தான்வேண்டும். ஆயினும் ஒன்றுக்கொன்று மாறுபாடான இவ்வித வரலாறுகளடங்கிய நூலானது கடவுள் அருளிய வேதம் என்று எங்ஙனம் கூறலாம்? கடவுள் தமக்குள்தாம் விரோதப்பட்டவரன்றே. இதுநிற்க, கிறிஸ்துசமயநூலிலே மனுஷசிருஷ்டிப்பைக்குறித்து ஒரே ஒரு வரலாறுண்டு. அந்த வரலாற்றிலே ஆண்டவர் வானத்தையும் பூமியையும் அவற்றிலடங்கிய சமஸ்தத்தையும் சிருஷ்டித்தருளியபின்பு மனிதனைச் சிருஷ்டித்ததாகவும், அவன் உடலை மண்ணிலிருந்துருவேற்றி, அவன் நாசியில் தமது சுவாஸத்தை ஊதி, அவனை ஜீவாத்மாவாக்கினார் என்றும் வாசிக்கிறோம் எமதன்பரே, இதுவே நம்முடைய புத்திக்கும் மனதுக்கும் பரிபூரண திருப்தியளிக்கும் வரலாறாயிருக்கின்றது.

ஆத்துமாவானது நித்தியவஸ்துவாய், இம்மையிலே அது இயற்றும் நல்வினை தீவினைகட்குரிய பலாபலன்களை அநுபவிக்கும்படி தேகம் மாண்டாலும் தான் மாளாமல் என்றும் சீவித்திருக்கும் என்றும் வேதம் உபதேசிக்கின்றது. வேதத்திலே மானிடர்க்கு "மனுஷ" என்னும் பேரிட்டிருக்கிறது. அதற்கருத்தம் "நினைக்கிறவன்" என்பதே. இதைவிட உயர்ந்ததும் சிறந்ததுமான பெயரை அவனுக்கிடுவது அரிதெனத் தோன்றுகின்றது. இந்த நாமதேயத்தால் அவனுக்கும் மற்றப் பிராணிகளுக்கும் உள்ள பெரும்பேதமானது ஐயந்திரிபற விசதமாகிறது. விலங்கு பறவை முதலானவைகளுக்கில்லாத நினைக்குஞ் சத்தி பெற்ற மனமானது மனுஷனுக்கே உரியது. இதுமுகாந்தரத்தினால்தான் அவன் தன் செயல்களுக்கெல்லாம் உத்தரவாதியாயிருக்கிறான். அவனுக்கு நன்மை இது, தீமை இது என்னும் பகுத்தறிவுண்டாயிருக்கிறதுமன்றி, ஒன்றைச் செய்யவும் செய்யாதிடவும் அவனுக்கு ஸ்வாதீனசித்தமும் உண்டு. மிருகங்களோ இவ்வித அறிவற்றவைகளாய் தமக்குள் அமைத்திருக்கும் ஓர் விசேஷ நட்டுச் சத்தியால் தத்தம் சாதிக்குரிய தொழில்களைக் கிரமப்படி நிறைவேற்றிவருகின்றன. இவ்விஷயங்கள் அநுபவத்தாலும் ஆலோசனையாலும் அறியப்படும் விஷயங்களானமையால் வேதமானது இவற்றைக்குறித்துச் சத்தியத்தை உபதேசிக்கின்றது.

அன்றியும் வேதமானது, மனுஷன் கடவுள்நேரிலே பெரும் பாவியாயிருக்கிறான் என்று போதிக்கின்றது. பாவத்தைப்பற்றி வேதத்தில் வழங்கியிருக்கும் பதங்களின் பொருளைப்பார்த்தால், இவ்விஷயத்திலும் வேதோபதேசம் உண்மையாயிருப்பதை அங்கிகரித்தல்வேண்டும். உதாரணமாக, "பாபம்" என்னும் பதத்திற்கு "விழுதல்" என்றர்த்தம்: உயர்ந்த நிலையிலிருந்து தாழ்ந்த நிலையில் விழுதல். அன்றியும் அகஸ், எனஸ், அம்ஹஸ் முதலிய பதங்கட்கெல்லாம் "போதல்," அதாவது "நெறிதவறிப்போதல்," "குறிதப்பிப்போதல்" என்பதே மூல அர்த்தமாம். இவ்வாறு வேதோபதேசமும் கிறிஸ்துமதோபதேசமும் இவ்வொரு விஷயத்தில் பொருந்தியிருக்கின்றது. பைபிலிலே பாவமானது "விழுதல்" என்றும், "நன்னெறியினின்றும் பிறழ்தல்" என்றும் சொல்லியிருக்கிறது. அப்படியே வேதத்திலும் அது "தேவ கட்டளையை வேண்டுமென்று மீறுதல்" என்றும், தேவர்கள்மாத்திரம் இறக்கக்கூடிய "பளுவான சுமை" என்றும், பாவியைத் துன்பத்துடன் இணைக்கும் "பந்தம்" என்றும் விவரித்திருக்கிறது. இது உண்மையான உபதேசமே. இது சர்வானுபோக சத்தியமானதால், இதைச் சகல சமயிகளும் ஒப்புக்கொள்வார்கள்.

மனுஷனானவன் தனக்குப் பிரியமான எதையும் போஜனபானம்பண்ணலாமென்பதும் வேதோபதேசந்தான். தற்காலத்தில் ஐரோப்பியர் செய்துவருவதுபோலவே, பூர்வத்திலிருந்த இந்துக்களும் ஆடு, மாடு, கோழி முதலானதுகளை அடித்துச் சாப்பிட்டுவந்தார்கள். அவர்கள் காய்கனி கிழங்குகளைமாத்திரம் புசித்துவந்தார்கள் என்பது பிசகு. அவர்கள் மாம்சபட்சிணிகளாயிருந்ததுமன்றி, "ஸோமா" என்னும் ஓர்வித மதுவையும் குடித்துவந்தார்கள். இவ்வுஷ்ணகண்டத்தில் குடிவெறி பொல்லாதானமையால், காலக்கிரமத்தில் அவர்கள் மதுபானப் பிரியராகி, மிதமிஞ்சிக் குடித்து வெறித்துத் தங்கள் சீரையும் சிறப்பையும் இழந்துவிடுந்தருணத்தில், மனுமுதலான தர்மசாஸ்திரிகள் எழுந்தருளி லாகிரியான பதார்த்தங்கள் கிஞ்சித்தென்கிலும் சாப்பிடப்படாதென்று சட்டங்கள் நிரூபித்துப் பிரசைகளைப் பெரும் பாதகத்தினின்றும் காத்துரட்சித்தார்கள். தற்காலத்திலே அநேக இந்துக்கள் பிராண்டி முதலான பதார்த்தங்களைச் சாப்பிடுவது வெகுவும் பரிதாபமான காரியமாயிருக்கின்றது. இவ்விஷயத்தில் அவர்கள் வேதத்தின்படி நடவாமல் மனுதர்மசாஸ்திரத்தின்படி நடப்பார்களாயின் அதிக நலமாயிருக்கும்.

வேதத்திலே சிசுவிவாகம் கற்பிக்கப்படவுமில்லை; பூர்வ இந்துக்கள் அதை நடத்திவந்ததுமில்லை. தங்கள் குழந்தைகளை அதி பாலியத்தில் விவாகஞ்செய்விக்கிறவர்கள் வேதத்திற்கு விரோதமாய் நடக்கிறார்கள். அறியாமையினாலே அவர்கள் வேதோபதேசத்தை ஆதியொடந்தமாய் நிறைவேற்றிவருகிறதாக நினைத்துக்கொள்ளுகிறார்கள். இந்தக் காரியத்தில் வேதத்துக்கும் எமதன்பர் நடத்தைக்கும் வெகு பேதமுண்டு. சிசுவிவாகம் என்னும் பொல்லாத வழக்கத்தை விட்டுவிட்டு வேத ஏற்பாட்டின்படி நடக்க முயல்வதே நன்று.

விதவைகள் விவாகமானது வேதத்திலே கண்டிக்கப்படவில்லை. இருக்குவேதம் X. 5: 27, 8 காண்க. விதவைகள் விவாகஞ்செய்யலாகாதென்பது எவ்வளவு கொடூரமான சட்டமாயிருக்கிறது. தாரமிழந்த புருஷர்கள் தங்களுக்கிஷ்டமானபடி விவாகஞ்செய்துகொள்ள, விதவைகள்மாத்திரம் அவ்வாறு செய்யலாகாதென்கிறது எல்லா நியாயத்துக்கும் தர்மநீதிக்கும், தயாள சிந்தைக்கும் சுத்த விரோதமாயிருக்கிறது. வேதம் ஒன்றைப்போதிக்க, தேசம் ஒன்றைச்சாதித்தால், தீமை விளையாமற்போமோ? ஆகிலும், இந்த தர்மவிஷயங்களிலே வேதோபதேசம் சத்தியோபதேசமாயினும், மனுஷோற்பத்தியைப்பற்றி அது தனக்குத்தானே விரோதமான உபதேசங்களைப் போதிக்கின்றமையால் அது கடவுளருளியதன்று என்பது திருஷ்டாந்தமாயிற்று.

## ANSWERS TO OBJECTIONS.—சந்தேக நிவிர்த்தி.

### ஏசுகிறிஸ்துவும் கடவுளா?

சென்ற வருஷம் டிசெம்பர் மாதத்தில் இரண்டாம்முறை பதிப்பிக்கப்பட்ட 3-ம் நம்பர் டிராக்ட்டிலே எமது நண்பர் ஒருவர் "ஏசுகிறிஸ்துவும் கடவுளா" என்னும் வினவுக்கு விடைகூற முயன்று பைபிலிலிருந்து சில வாக்கியங்களை எடுத்துரைத்து, அவற்றிற்குத் தமக்குத் தோன்றியபடி தாற்பரியங்கள் சொல்லி இயேசு மனிதரேயன்றிக் கடவுள் அல்லரென்று சாதித்திருக்கிறார். "ஏசுகிறிஸ்து கடவுளா" என்னும் கேள்வி நவமான கேள்வியன்று. அது ஈராயிரவருஷகாலமாய்ப் பலபேரால் பலவிடங்களிலே கேட்கப்பட்ட சாமானிய கேள்வியாயிருக்கிறது. பிரபஞ்சத்திலே மானிட உருவெடுத்த ஒவ்வொருவரும் இந்தக் கேள்வியைக் கேட்டு அதற்கேற்ற உத்தரவையும் பெற்றுக்கொள்ளவேண்டும். இத்தேசத்தாரும் இக்கேள்வியைக் கேட்கத்தொடங்கியது நல்ல சகுனமாயிருக்கின்றது. ஆயினும் ஆய்ந்தோய்ந்து பாராமல், ஒருபட்சமாய்ச் சாய்ந்து அவஉத்தேசத்துடன் பைபிலிலே வாக்கியங்களைத் தேடியெடுத்து, மிக்கவிரைவுடன் இக்கேள்விக்கு விடையளிக்கத்துணிவது சரியன்று. யாதொன்றையும் தூக்கி நோக்கி நிறுத்திச் சொல்லவேண்டும். இப்பொழுது எம்மால் கூடியவரை இக்கேள்விக்கு பைபிலிலிருந்தே விடையளிக்க முயல்வோம்.



இயேசுகிறிஸ்து திரியேக தேவத்துவத்தில் "குமாரன்" என்னும் இரண்டாம் ஆளும் மனுஷாவதாரம்பண்ணின உலகரட்சகருமாயிருக்கிறார். இது கிறிஸ்து சமய சித்தாந்தம். சூரியகிரணமாகிய ஒன்றிலே வெவ்வேறு பதார்த்தங்களாகிய ஒளியும், உஷ்ணமும், வர்ணமும் ஒன்றுகூடி ஒரே கிரணமாய்த் தோன்றுவதுபோல, ஞானசூரியனாகிய பரமாத்மாவிலே பிரத்தியேக புருஷராகிய பிதா, குமாரன், ஆவி என்னும் மூவரும் ஒன்றுகூடி ஒருகடவுளாய் விளங்குகின்றனர். இம்மூவரில் குமாரனானவர் உலகத்தை ஈடேற்றும்பொருட்டு மானிட வடிவெடுத்துத் தோன்றினார் என்று கிறிஸ்துமதம் உபதேசிக்கின்றது. ஆதலால் இயேசுவுக்கு தெய்வத்தன்மையும் மனுஷத்தன்மையும் உண்டென்பது விசதமாகத்தக்கதாய் அவருடைய திரு அவதாரச் சரிதையடங்கிய சுவிசேஷக்கிரந்தங்களிலே சில வாக்கியங்கள் அவருடைய மனுஷீகத்தையும் வேறு சில வாக்கியங்கள் அவருடைய தெய்வீகத்தையும் குறித்தவைகளாயிருப்பது இயல்பே. இதுநிற்க, அவருடைய மனுஷீகச் செயல்களைமாத்திரம் கருதிய வாக்கியங்களைத் தமக்கு ஆதாரமாக்கிக்கொண்டு இயேசு கடவுளல்ல மனுஷனே என்று சொல்வது, சிம்மாசனத்தை விட்டிறங்கி ராஜனுக்குரிய ஆடை ஆபரணங்களும் கன கௌரவங்களுமில்லாமல் தன் மனைவி மக்களுடன் சிறிதுநேரம் கொஞ்சிக் குலாவிக்கொண்டிருக்கும் ராஜனைப் பார்த்து, அவன் ராஜனல்ல, சாமானியமான பிரஜைகளில் ஒருவனே என்று மதிமயங்கிச் சொல்வதுபோலும். இப்பொழுது இயேசுவின் தெய்வீகத்தை உபதேசிக்கும் சில வாக்கியங்களை எடுத்துரைப்போம்.

ஆதியிலே வார்த்தை இருந்தது, அவ்வார்த்தையே தேவனென்றும், அவ்வார்த்தை மாம்சமாயிற்றென்றும் (யோவா. 1: 1, 14.), தேவன் தம்முடைய குமாரனை அனுப்பினாரென்றும் (யோவா. 3: 16, 17.) சொல்லியிருக்கிறது. பரலோகத்திலிருந்து இறங்கினவரும் பரலோகத்திலிருக்கிறவருமான மனுஷகுமாரனேயல்லாமல் பரலோகத்துக்கேறினவன் ஒருவனுமில்லை என்றும் (யோவா. 3: 13.), பிதாவே, உலகமுண்டாவதற்குமுன்னே உம்மிடத்தில் எனக்குண்டாயிருந்த மகிமையினாலே இப்பொழுது நீர் என்னை உம்மிடத்திலே மகிமைப்படுத்தும் என்றும் (யோவா. 8: 58.) இயேசு தாமே திருவுளம்பற்றினார். ஆபிரகாமுக்குமுன் நான் இருக்கிறேன் என்று அவர் சொன்னபோது யூதர்கள் அவரை தேவதூஷணன் என்று கல்லெறிந்து கொல்லத் துணிந்ததுமன்றி, "எங்களுக்கு ஒரு நியாயப்பிரமாணம் உண்டு; இவன் தன்னை தேவனுடைய குமாரன் என்று சொன்னபடியினால் அந்த நியாயப்பிரமாணத்தின்படியே இவன் சாகவேண்டும்" என்று அவர்பேரில் குற்றஞ்சாட்டினார்கள். அன்றியும் என்னைக் கண்டவன் பிதாவைக் கண்டான் என்றும் (யோவா. 14: 9), என்னை நேசிக்கிறவனுடைய உள்ளத்தில் நானும் என் பிதாவும் வந்து தங்கியிருப்போம் என்றும் (யோவா. 14: 23.) இயேசு உரைத்திருக்கிறார். அவர் தேவனுடைய ரூபமாயிருந்தும், தம்மைத்தாமே வெறுமையாக்கி, அடிமையின் ரூபமெடுத்து, மனுஷர் சாயலானார் என்றும் (பிலி. 2: 6, 7.), தேவன் மாம்சத்திலே வெளிப்பட்டாரென்றும் (1 தீமோ. 3: 16.) பவுல் சொல்லுகிறார். மேலும் இயேசு கர்த்தர் என்றும் (சங். 110: 1; 45: 7. எபி. 1: 8.), கடவுளென்றும் (யோவா. 1: 1.), மெய்யான தேவன் என்றும் (1 யோ. 5: 20), யெகோவா என்றும் (ஏசா. 6: 1, 5; 40: 3. சங். 83: 18. எபி. 1: 10.), இருக்கிறேன் என்றும் (யாத். 3: 14; வெளி. 1: 8.), ராஜாதிராஜாவும், கர்த்தாதிகர்த்தாவுமான பாக்கியமுள்ள ஏக சக்கிராதிபதி என்றும் (1 தீமோ. 6: 16.) அழைக்கப்பட்டிருக்கிறார்.

"நானும் பிதாவும் ஒன்றாயிருக்கிறோம்" என்று (யோவா. 10: 30.) இயேசு தாமே சொல்லியிருக்கிறார். சிலர் இவ்விடத்தில் "ஒன்று" என்பது ஒரே தன்மையைக் குறிக்காமல் இருவருக்கும் உள்ள சித்தப்பொருத்தம், சிநேகபந்தம் முதலான ஐக்கியப்பாட்டைமாத்திரம் குறிக்கிறதென்று குயுக்தி பண்ணுகிறார்கள். கிரேக்கபாஷையிலே "ஒன்றாயிருக்கிறோம்" என்பதுக்கு "ஒரே வஸ்துவாயிருக்கிறோம்" என்பதே பொருள். இயேசுவின் இவ்வார்த்தையைக் கேட்ட யூதர்கள் அதின் உண்மைப் பொருளைக் கிரகித்து அவரைப்பார்த்து "நீ மனுஷனாயிருக்க உன்னை தேவன் என்று சொல்லி, இவ்விதமாக தேவதூஷணம் சொல்லுகிறபடியினால் "உன்மேல் கல்லெறிகிறோம்" என்றார்கள் (யோவா. 10: 33. காண்க.). இதுபோன்ற இன்னும் அநேக வாக்கியங்களையும் எடுத்துரைக்கலாம். ஆகிலும் இச்சமயத்திற்கு இவைபோதும் என்று எமக்குத் தோன்றுகின்றது. மேற்படி வாக்கியங்களைக் கருத்தாய் வாசிக்கும் புத்திமான்களுக்கு இயேசுவுக்கு பைபிலிலே தெய்வத்தன்மை கூறியிருக்கிறதென்பது புலப்படாமற்போகாது.

இப்பொழுது மேற்படி டிராக்ட்டிலே கண்டிருக்கும் ஆக்ஷேபனைகளுக்குச் சமாதானம் கூறுவோம். யோபு. 1: 6. எரே. 31: 9, 20. இவற்றில் "குமாரர்," "மூத்தகுமாரன்" என்னும் பதங்கள் மனுமக்கள் எல்லாம் ஒருவாறு கடவுள்புத்திரர் என்று சொல்லத்தக்க பொதுப்பொருளில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. பிறந்ததெல்லாம் பிள்ளையல்ல என்னும் பழமொழிக்கிசைய இயேசு ஒருவர்மாத்திரம் சிறப்புப்பொருளில் தேவனுடைய குமாரனாயிருக்கிறார். (மத். 27: 46.) இது இயேசுவின் மனுஷீகத்தைக் குறிக்கும் வாக்கியங்களில் ஒன்று. எமதன்பர் இந்த வாக்கியத்தைத்தான் எடுத்துரைப்பானேன்? இயேசு உண்டார், நடந்தார், பேசினார் ஆதலால் அவர் கடவுளல்லவென்று ஒரே நியாயத்தால் உறுதிசெய்துவிடலாமே. திருக்குமாரர் எப்போது மானிட வடிவெடுத்து இவ்வுலகின்கண் உதித்தாரோ அப்போது பாவம் ஒன்றொழிய மற்ற மனுஷீகத்தொழில்கள் எல்லாம் அவரிடம் விளங்குவது இயல்பென்று எமதன்பர் புத்திக்குத் தோற்றாமற்போனதென்ன? விஷ்ணு வராக அவதாரம் எடுத்தபொழுது அவர் வராகத்தைப்போல் பூமியை மூக்கால் தோண்டவில்லையா? அதனால் அவ்வவதாரர் விஷ்ணுவல்ல வராகமேயென்று எமதன்பர் சாற்றுவரோ? அவ்வாறு செய்தால் காதிலணிவதைக் காலிலும் காலிலிடுவதைக் காதிலும் மாட்டிக்கொள்ளும் விபரீதமாகுமே. "மேலும் ஏசுகிறிஸ்து பசாசின் கையிலகப்பட்டுப் படாதபாடுபட்டார்" என்பது சுத்த பிசகு. பசாசு அவரைப் பாவஞ்செய்விக்கும்படி சோதித்தது மெய்தான்; ஆனால் அவ்விதச் சோதனையில் நாம் அனுதினமும் விழுந்து சிக்கிக்கொள்வதுபோல் இயேசு செய்யாமல் அச்சோதனையைச் செயித்துப் பசாசைத் துரத்திவிட்டதே வாஸ்தவம்.

(மத். 7: 21.) இந்த வாக்கியம் நமது ஹிந்து நண்பர்க்கு வெகு பிரீதியான ஆக்ஷேபனை அடங்கியது. இதை ஊரெங்கும் கேட்பார்கள். இந்த வசனத்திலே இயேசு தம்முடைய தன்மையைப் பற்றிப் பேசாமல் தம்மை அடுத்திருந்தவர்களின் இதழ் ஸ்துதியைக் கண்டித்து அவர்கள் இருதய ஸ்துதியைக் கற்பிக்கிறார். இருநேத்திரங்களையும் திறந்துவாசிக்கும் ஒவ்வொரு சிறுவனுக்கும் இவ்வாக்கியத்தின் பொருள் எளிதில் விளங்கும். பூர்ணவயதுள்ள எமதன்பர்க்கு இது விளங்காமற்போனது எமக்கு மிக்க வியப்பாய்த் தோன்றுகின்றது. இம்மாதிரியான உவமை அலங்காரத்தை நாம் பிரதிதினமும் பலவாறாய் உபயோகித்துவருகின்றோமே. "என்னை ஐயா, ஐயா என்கிறவன் எனக்கு ஊழியனல்ல; நான் இடுவதைச் செய்கிறவனே எனக்கு ஊழியனாவான்" என்று எத்தனை எசமான்கள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அதுபோலவே இயேசுவும் தமது சீஷரைப்பார்த்து "என்னை முகஸ்துதியாக, ஸ்வாமி, ஸ்வாமி, என்கிறவர்களுக்கு பரமபயன் கிடையாது; என் பிதாவின் சித்தத்தை நிறைவேற்றுகிறவர்களுக்குமாத்திரம் அது கிடைக்கும். நானும் பிதாவும் ஒன்றானமையால் அவர் சித்தமும் என் சித்தமும் ஒன்றேயென்றறிக" என்றபடி.

(1 யோ. 5:7.) இந்த வாக்கியம் கிரேக்கு பைபிலில் இல்லாதது மெய்தான். ஆனால் இதில் எமதன்பர் உரைக்கிறபடி யாதொரு 'திருட்டுத்தனமே' இல்லை. பூர்வத்தில் அச்சுயந்திரங்கள் இல்லாமையால் நூல்கள் எல்லாம் கையெழுத்துப் பிரதிகளாயிருந்தன. தற்காலத்தில் தமிழிலேயுள்ள கையெழுத்துப்பிரதிகளிலே பாடபேதங்கள் இருக்கிறதுபோலவே பூர்வத்திலிருந்த கிரேக்கக் கையெழுத்துப் பிரதிகளிலும் பாடபேதங்கள் உண்டு. இங்கிலீஷ் பைபில் மொழிபெயர்த்த பின்பு கண்டுபிடிக்கப்பட்ட அதிபூர்வ கையெழுத்துப் பிரதிகளிலே இந்த வாக்கியம் இல்லாமையால் அது இப்பொழுது தொகுக்கப்பட்டிருக்கிறது. இனி பதிப்பிக்கப்படும் தமிழ் தெலுங்கு வேதாகமங்களிலும் இவ்வாக்கியம் தொகுக்கப்படும். அதினாலே ஒரு தோஷமும் இல்லை. அதை விட்டுவிட்டதே கிறிஸ்தவர்கள் யதார்த்தவாதிகள் என்று திருஷ்டாந்தப்படுத்தினது. முன்காட்டியபடி இயேசுவின் தெய்வத்தன்மைக்கு அவ்வொருவாக்கியம்மாத்திரம் ஆதாரமன்று. 2 கொரி. 13: 14-லே இயேசு கடவுளென்று வெளிப்படையாய்ச் சொல்லாவிடினும், அவர் பேரைப் பிதாவோடும் பரிசுத்த ஆவியோடும் கூட்டியுரைத்ததுமன்றி, பிதாவுக்குமுன்னே அவரை வைத்திருப்பதால் அவருடைய தெய்வத்தன்மை குறிப்பாய் விளங்குகின்றது. மத். 16: 27, 28-லே இயேசு நியாயந்தீர்க்கவருவேன் என்றது அவருடைய ஆவியின் வருகையைக் குறித்தது. அப்படியே அவர் "உலகமுடிவு பரியந்தம் நான் உங்களுடனேகூட இருப்பேன்" என்றும் உரைத்திருக்கிறார்.

இயேசு அற்புதங்கள் செய்தமையால் அவர் கடவுள் என்று யாம் கூறுகிறதில்லை. ஆகிலும் அவர் செய்த ஒரு அற்புதம்மாத்திரம் எந்த தேவதாபக்தனும் எக்காலத்தும் செய்ததேயில்லை. (யோவா. 10: 17, 18.) இந்த வாக்கியத்திலே அவர் தமது பிராணனைத் தாமே கொடுக்கிறவராகவும் அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளுகிறவராகவும் உரைத்தபடியே இயேசு தாம் மரித்த மூன்றாம்நாள் அருணோதயத்தில் உயிரோடெழுந்தருளினார். இதுவே அற்புதங்களிற் சிறந்த அற்புதமாயிருக்கின்றது. அந்நாள் முதற்கொண்டு இந்நாள்பரியந்தம் இயேசுவின் சத்தி உலகத்தில் பிரசித்தமாயிருக்கிறது. அவருடைய சத்திக்குட்பட்ட தேசங்களில் பாக்கியமும், கல்வி நாகரிகமும், ஸ்வாதீனமும், பரிசுத்தமும் விர்த்திபெற்று வருகின்றன.

அவரை அங்கிகாரம் பண்ணாத தேசங்களிலோ நிர்ப்பாக்கியமும், கல்விக்குறைவும், அடிமைத்தனமும், ஸ்திரீபேதைமையும் பலவித பாவமும் விர்த்திபெற்றிருப்பதைக் காணலாம்.

எமதன்பரே, இயேசு அந்நியர் என்று அவரைத் தள்ளிவிடவேண்டாம். உலகுக்கெல்லாம் ஒளிவீசும் சூரியன் ஒன்றேபோல், மானிடர்கள் யாவருக்கும் ஞான ஒளியையும் சீவனையும் அருளத்தக்கவர் ஒருவரே. அவரே இயேசுகிறிஸ்து. யாதொரு பட்சபாதமின்றி தலைகோல்போல் மயிரிடையும் ஒருபக்கம் சாயாமல் அவருடைய வரலாறடங்கியிருக்கும் வேதபுஸ்தகத்தைக் கருத்தாய் ஆராய்ச்சிசெய்ய எமதன்பர்களை வெகுவும் பிரார்த்திக்கின்றோம். "எல்லாவற்றையும் ஆராய்ந்து நலமானதைப் பற்றிக்கொள்ளுங்கள்."

## NEWS AND NOTES.—வர்த்தமானக்குறிப்புகள்.

**இராஜ தற்கொலை.**—சென்றமீ ஆஸ்திரியா ராச்சியத்தின் பட்டகுமாரர் யாதுகாரணத்தாலோ தற்கொலைசெய்துகொண்டார்.

**நியூயார்க்கு தபாலாபீசு.**—இந்த நகரத்துத் தபாலாபீசிலே தினம் ஒன்றுக்கு 75000 ரூ. தபால்முத்திரைகள் விற்கப்படுகிறதாம்.

**சம்பளவரி.**—பிரசைகள்தவிர, பங்காளத்திலும் சென்னையிலும் உள்ள ஜமின்தார்களும் இந்த வரியைக் கொடுக்க வேண்டுமோம்.

**உப்புவரவு.**—கவர்ன்மெண்டார் உப்புவிலையை அதிகப்படுத்தினதினால் அதின் வரவு சுமார் கோடி ரூ. வரையும் மேற்பட்டிருக்கிறது.

**தேங்காயெண்ணெய்.** — தேங்காயெண்ணெயிலிருந்து சாப்பிடத்தக்க ருசிகரமான ஓர்வித வெண்ணெய் ஜர்மனியிலே உண்டுபண்ணிவருகிறார்கள்.

**மட்ரிகுலேஷன் பரிட்சை.** — இந்தப் பரிட்சையிலே 6 சுதேசஸ்திரீகள் தேறியிருக்கிறார்கள். அவர்கள் அத்தனை பேரும் சுதேச கிறிஸ்தவர்கள்.

**ஜப்பான் ராணியார்.**—இந்த மாதுசிரோமணி ஜர்மன், ருஷன், பிரெஞ்ச், இத்தாலியன்முதலிய பாஷைகளை வெகு சிரத்தையுடன் படித்துவருகிறார்களாம்.

**டி. எஸ். வைட்டு.**—பூரேஷிபர் முதலானவர்களின் ஐக்கிய சங்கத்தை ஸ்தாபித்து அதின் முதலாளியாயிருந்த டி. எஸ். வைட்டு என்பவர் சென்றமீ இறந்துபோனார்.

**இங்கிலீஷ்பாஷை.**—இந்தப் பாஷையைப் பேசுகிறவர்கள் இன்னும் 11 வருஷத்திலே 12 கோடிபேர் இருப்பார்கள் என்று கிளாட்ஸ்டன் மந்திரி மதிப்பிட்டிருக்கிறார்.

**காகிதம் கட்டடக்கருவியாதல்.**—தற்காலம் அமெரிக்காவிலே கட்டடவேலைக்குக் காகிதத்தை உபயோகிக்கிறார்கள். அதற்கு மரத்துக்கில்லாத ஆறுலட்சணங்கள் உண்டாம்.

**படம்பிடித்தல் அச்சிடுகருவியானது.**—அச்சுப்பதிக்கப்பட்ட புஸ்தகத்தைப் படம்பிடித்துப் புஸ்தகமாக்கிச் சொற்ப விலைக்கு விற்கும்படி ஒரு கம்பெனி ஏற்பட்டிருக்கிறது.

**மஹாராஜாவின் அபிப்பிராயம்.**—ஹால்கர் மஹாராஜா அவர்கள் நாஷனல் காங்கிரெஸ் சபையார் முறையிடும் தீமைகளைவிட இத்தேசத்து சாதிவித்தியாசமே பெருந்தீமை என்கிறார்.

**திருவிதாங்கோடு.**—இந்த ராச்சியத்திலே இதுவரையும் வழங்கிவந்த சக்கரம், பணம்முதலிய பூர்வ நாணயங்களை விட்டுவிட்டு ரூபாய் முதலிய இங்கிலீஷ் நாணயங்கள் அடிக்கப் போகிறார்கள்.

**பெங்களூர் ஸ்டேஷன் மாஸ்ட்டர்.**—ஒரு சுதேச ஸ்திரீயை மரண அபாயத்தினின்றும் இரட்சித்த பெங்களூர் ஸ்டேஷன் மாஸ்ட்டருக்கு கவர்ன்மெண்டார் 200 ரூ. பொறுமான இனும்பில்லை கொடுத்தார்கள்.

**ஐர்லன்டு.**—இங்கிலீஷ்ராச்சியத்தின் ஓர் பாகமாகிய ஐர்லன்டு தீவிலே சட்டத்துக்கு விரோதமாய் நடக்கும் அனேக பிரபுக்கள் சிறையிலடைக்கப்படுகிறார்கள். தேசசட்டத்துக்கு முகதாட்சணியமில்லை.

**இத்தேசத்துக் கவர்ன்மேன்டாரின் சம்பளவாவு.**—பங்காளம், சென்னை, பம்பாய்முதலிய நாடுகளின் கவர்னர் முதலானவர்களுக்கு வருஷம் ஒன்றுக்குச் சுமார் 50 லட்சம் ரூபாய் சம்பளமாகச் செலவாகிறது.

**மனுநீதி.**—இளைஞரும் பித்தரும் யாதொரு உடன்படிக்கையும் செய்யலாகாதென்று மனுதர்மசாஸ்திரத்திற் கூறியிருக்க, 10 வயதுக்குட்பட்ட பாலகர் விவாகம் என்னும் உடன்படிக்கைசெய்துகொள்வது நியாயமோ என்று அனேகர் கேட்கிறார்கள்.

**யூனட்டேட் ஸ்டேய்ட்ஸ்.**—ஐக்கிய மாகாணங்கள் என்னும் இந்த ராச்சியத்துக்கு நவமாய்த் தெரிந்துகொள்ளப்பட்ட அதிபதியின் பேர் ஜெனரல் ஹாரிஸன். அவருக்கு வயது 60. இத்தேசத்துக்கு அரசன் இல்லை. குடிகளே அரசு நடத்திவருகிறார்கள்.

**எம்ப்ரேஸ் ராணிகள்.**—"எம்ப்ரெஸ்" என்னும் பட்டம் வகித்து வாழும் ராணிகள் உலகத்திலே 10 பேர் உண்டு: விக்டோரியா, ஜர்மன்ராணிகள் 3 பேர்; இலிஸபெத், மேரி, தெரிஸா, ஜப்பான்ராணி அய்யோன் கோ, பிரென்ச் ராணி யூஜினி, சீனராணி, ஆக பத்துபேர்.

**ஆவிக்கூடு.**—சென்றமீ பம்பாயிலே ஆவிக்கூட்டில் சுமார் 2000 அடி உயரம்போன ஸ்பென்ஸர் அவர்கள் "பாரக்கூட்" என்னும் ஓர்விதக் குடையிலே இறங்கினார். ஆவிக்கூட்டிலிருந்து அதல்தொங்கும் குடையிலே குதித்தல் அபாயமான காரியந்தான் என்று சொல்லவேண்டும்.

**கர்னல் பல்க்லி.**—கவர்ன்மென்ட் பணம் 6000 ரூபாய் களவாய்ச் செலவுசெய்துவிட்டதாசத் தீர்ப்புப்பெற்ற கர்னல் பல்க்லி அவர்கட்கு உத்தியோக நஷ்டமும், ஒருவருஷ சிறையும், 20,000 ரூ. அபராதமும் கிடைத்தது. இங்கிலீஷ் அரசாட்சியிலே சுயஜாதிமித்திரத்துவம் இல்லை என்பதற்கு இதுவே சாட்சி.

**சிறு பத்திரிகை.** — மெக்ஸிகோவிலே பிரசுரஞ்செய்யப்படும் "எல்டெலி கிராய்மோ" என்னும் வாராந்தர பத்திரிகையானது உலகத்திலுள்ள பத்திரிகைகளிலெல்லாம் சிறியதாம். அது 5 அங்குல நீளமும், 3 அங்குல அகலமுமுள்ள இரண்டே ஏடுள்ளது. அதின் சிறந்தவாக்கியம் "கொஞ்சம் வைக்கோலும் அதிக கோதுமை" என்பது.

**வெகுமானம்.**—டப்ரின் பிரபு கிளாட்ஸ்டன் மந்திரிக்கு வெகுமானமாக வெள்ளியாற்செய்து உள்ளே பொன்முலாம் பூசி இத்தேசத்துச் சரித்திரசம்பந்தமான அதிவிசித்திர வேலைதீர்ந்த பெரிய ஓர் பாத்திரம் அனுப்பிவைத்தார். நம்முடைய கவர்னர் ஜெனரலாயிருந்த டப்ரின்பிரபு இப்பொழுது இத்தலிதேசத்திலே தானுபதியாயிருக்கிறார்.

**ஜப்பான்தீவின் விர்த்தி.**—18 வருஷத்திற்குள்ளே இத்தீவிலே 575 தினபத்திரிகைகளும், இன்னும் அனேகவிதமான பத்திரிகைகளும் ஏற்பட்டிருக்கின்றன. ஜப்பான் தீவார் இத்தேசத்தார் செய்கிறதுபோல பழமையைப்பாராமல் நன்மை ஒன்றையே கருதுகிறதினால் தங்கள் நாட்டை விரைவிலே சீருக்கும் செழிப்புக்கும் விர்த்திசெய்கிறார்கள்.

**குலீன்பிராமணர்.**—குலீன் என்னும் குலத்தைச் சேர்ந்த பிராமணர்கள் பலதார புருஷர்களாம். ஸ்ரீதனத்துக்காக மீண்டு மீண்டு விவாகஞ் செய்துகொள்ளுகிறார்கள். இவர்களில் 12 பேருக்கு 652 மனைவிகள் உண்டு, சிலருக்கு 80 மனைவிகளும், சிலருக்கு 40 மனைவிகளும் உண்டு. இந்த அக்கிரமங்கள் நம்முடைய நாட்டைவிட்டு எப்பொழுது ஒழியுமோ?

**மதுவிலக்கு வீரன்.**—மதுவிலக்கு வீரராகிய பார்லிமென்ட் மெம்பர் கேய்ன்துரையவர்கள் இத்தேசம்வந்து பல இடங்களிலே மதுவிர்த்தியைப்பற்றிப் பிரசங்கங்கள்செய்து போயிருக்கிறார். நாட்டிலே எங்கேபார்த்தாலும் நாட்டுச்சரக்கும் இங்கிலீஷ் சரக்கும் ஏராளமாய் விற்பனையாகின்றது. சென்ற 15 வருஷத்திலே மதுவரி இருமடங்குஅதிக்கப்பட்டிருக்கிறது. கவர்ன்மென்டார் பணத்துக்காசைப்படாமல் மதுபானம் விர்த்தியடையாவண்ணம் முயலவேண்டும்.

**இரண்டுவிதமாய் நோக்குதல்.** — ஒரு ஏற்றச்சால் மற்றொருசாலைப் பார்த்து ஏன் விசனமாயிருக்கிறாயென, அதற்கு இரண்டாம் சால் "நாம் விருதாவாய் நிரப்பப்படுகிறதை நினைத்துத் துக்கிக்கிறேன், நாம் எவ்வளவுதான் நிறைந்தவர்களாய் ஏறினாலும்வெறுமையாகவே இறங்குகிறோம்" என்றது. அதுகேட்டு முதலாஞ் சால், "ஐயோ, அப்படியல்லவே, நாம் துரவிலே எவ்வளவுதான் வெறுமையாய் இறங்கினாலும் நிறைந்தவர்களாகவே ஏறிவருகிறோம். நீ காரியத்தை இப்படிப் பார்த்தால் என்னைப்போல நீயும் சந்தோஷமுள்ளவனாயிருப்பாய்" என்றது.

மாதாந்திரப்பத்திரிகை: இதன் விலை 1 பை: 25 பிரதிகள் 2 அணா.
**Vol. II.** No. 5. மார்ச்சுமீ, 1889.

To be had of Mr. A. T. Scott, Tract Depôt, Madras, at Re. 1. per 200 Copies. Postage extra.

Printed at the S. P. C. K. Press, Vepery. 1889.

